உ

திருவருள் முன்னிற்க.

# நாட்டுப்பெண் கும்மி

இது

திருநெல்வேலி ஜில்லா முன்னீர்ப்பள்ளம்
பண்டிதர் மு. போ. ஈசுரமூர்த்தியாபிள்ளையால்
இயற்றப்பெற்றது.

PRINTED AT
The Pethachi Press, Palamcottah.
1920

உ

திருவருள் முன்னிற்க.

# நாட்டுப்பெண் கும்மி

இது
திருநெல்வேலி ஜில்லா முன்னீர்ப்பள்ளம்
பண்டிதர் மு. போ. ஈசுரமூர்த்தியாபிள்ளையால்
இயற்றப்பெற்றது.

PRINTED AT
The Pethachi Press, Palamcottah.
1920

# முகவுரை

அன்பர்காள்!

இற்றைக்கு முப்பது ஆண்டுகளுக்கு முன்னே நான் பாளையங்கோட்டை இந்து கல்விச்சாலையில் இருந்த காலத்திலே என்பேருடைய நண்பர் ஒருவர் (ஈசுரமூர்த்தியாபிள்ளை, இராதாபுரம்) ஒரு கைக்குறிப்புப் புத்தகத்தை என்னிடம் கொடுத்து "இது பொதுநலநோக்கத்துடன் பெண்பாலார்பொருட்டுச் செய்யக்கருதிய சிறுநூற் கட்டிடத்தினடிப்படையாக இருக்கின்றது. இதில் முயன்றவர் (வைக்கீல் அறிவானந்தம் தம் பிள்ளை, திரிசிரபுரம்) முத்தியடைந்தனர். ஆகையால் இதனைச் சீர் திருத்திக் குறை நிறைத்து முறறுப் பெறச் செய்திடல் தங்கள் கடமையாம்" என்றார். அதில் பெண்களுக்குரிய முக்கியமான சில சிறப்பியல்கள் குறிக்கப் பட்டிருந்தது கண்டும் தருணம் அறிந்தும் உடம்படலானேன். ஆகவே இருவரும்சேர்ந்து குறித்த வேலையை முடித்தோம். உடனே அவர் என்னைநோக்கி "இனிமேல் நடக்கவேண்டிய காரியங்களும் தங்களுக்கே உரியன" என்றுசொல்லி முழுதும் என் பொறுப்பில் வைத்திட்டார். அந்தோ! சீக்கிரத்தில் இவர்காலமும் முடிவுற்றது. என் ஊக்கம் தளர்வுற்றது. இக்கும்மி ஓர் மூலையில் மறைந்து உறங்கலுற்றது.

அப்பால் 20 ஆண்டுகளுக்குப்பின்னர் யான் ஸ்ரீவில்லிபுத்தூரில் C. M. S. கல்விச்சாலையில் இருக்குங்காலத்திலே திருவனந்தபுரத்தில் 1911-ல் தோன்றிய "அமிர்தவசனி" என்னும் மாதப் பத்திரிகைக்கு ஏதேனும் எழுத்துப்பகுதி அனுப்பும்படி எனது நண்பர் T. இராமலிங்கம் பிள்ளையவர்கள் M.A. என்னைக்கேட்டபோது பழய ஞாபகம் வந்தது. உடனே இக்கும்மியைத் தேடி எடுத்து ஒரு முறை படித்துப் பார்த்து கால மாறுதலுக்கேற்ப புதுப்பித்து அனுப்பிக்கொண்டு வந்

தேன். அமிர்தவசனியில் 22 அதிகாரங்கள் வெளியிடப்பெற்றன. பின்னர் "கதாவருஷணி"யிலும் சில பகுதிகள் பிரசுரமாயின.

இக்கும்மியை மேற்படி பத்திரிகைகளிற்பார்த்த பெண்கள் சிலர் தனிப்புத்தகமாக்கித்தரல் வேண்டுமென்று விரும்புவதுதெரிந்து அச்சிடலுற்றேன். இச்சமயத்தும் சிறிது புதுக்கலாயிற்று. மூன்று அதிகாரங்கள் கூடின. ஆயினும் மூல புருஷனைப்பற்றிய ஞாபகம் எனக்கு எப்பொழுதும் இருக்கும்பொருட்டு சில இடங்களில் என் மனப்பாங்கின்படி மாற்றாமல் அவர் வாக்கை அப்படியே வைத்திருக்கிருக்கிறேன். அப்படியிருந்தாலும் இதில் தொடர்புடைய மூவரில் எஞ்சிநின்ற யானொருவனே எல்லாப்பொறுப்பும் வகித்திருக்கிறபடியால், இதிலுள்ள குணங்களுக்கு மட்டும் மற்றிருவரும் என்னுடன் பங்காளிகள் என்பதும் குற்றங்களுக்கு யான் ஒருவனே உரியன் என்பதும் ஓர்ந்துணர்கின்றேன்.

இக்கும்மி ஸ்ரீவில்லிபுத்தூரில் நீராவி மண்டபத்திலே 7-4-1912ல் கனம் V. S. நாராயண அய்யரவர்கள் B. A. B. L. (டிஸ்டிரிக்ட் முன்சிப்) சபைத் தலைமையில் அரங்கேற்றப்பெற்றது.

இதனைப் பார்வையிட்டுதவிய கனம். C. P. சுப்பையா பிள்ளை B.A. அவர்களுக்கும், அச்சிடத்தூண்டிய V. வேதநாயகம்பிள்ளை M.A.B.L. அவர்களுக்கும் இதின் நல்வரவு நோக்கும் T. K. சிதம்பரநாத முதலியார் B. A. B. L. முதலிய கனவான்களுக்கும் என் நன்றியுணர்வு உரிமையாம்.

அன்பகம்
முன்னீர்ப்பள்ளம்
நவம்பர் 1920

மு. பொ. ஈசுரமூர்த்தியா பிள்ளை

# நாட்டுப்பெண் கும்மி

## முதல் அதிகாரம்

### கடவுள் வணக்கம்

உண்டென் றுணர்தெய்வம் ஒன்றென் றுணர் அதற்
கொப்புயர் வானதொன் றின்றென் றுணர்:
கண்டவற் றுள்ளெல்லாம் உள்ளுயிர் தானாய்க்
கலந்துறை கின்ற கருப்பொருளே. 1

எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் நிறைந்தவர்
எல்லாம் வல்லவர் நல்லவர்காண்
உள்ளும் புறமும் விளங்கொளி யாகிய
உத்தம னைத்தினம் சிந்திப்பமே! 2

தன்னைப் படைத்த பராபர வஸ்துவைத்
தன்னைப் பரிபா லிக்குந்தேவை
இந்நிலைத் தேதுதித் தேத்தி வணங்கிடும்
இல்லவளே நல்ல நாயகியாம். 3

கர்த்தரைப் பத்தியாய்ப் போற்றிய மங்கையர்
காதலர் தம்மையும் போற்றிடுவார் :
கர்த்த ரிடத்திலே அன்புள்ள மங்கையைக்
காதலனும் கனம் பண்ணுவனே. 4

தேவனுக் கஞ்சாத பெண்டுகள் வீட்டில்
தினந்தோறும் ஓயாத சண்டையுண்டாம்
கோபங்களும் பல பாவங்களும் அங்கே
கூச்சலும் நித்தம் குடிகொளுமே. 5

மனைகள் நிறையப் பணம் இருந்தும் நகை
பட்டாடை பூஸ்திதி தாமிருந்தும்,
தெய்வத்தின் மேற்பத்தி இல்லையென்றால் அவை
செல்வ மல்ல; வெறுஞ் சீரழிவே. 6

காலையிற் பூக்கள் மலர்ந்து சிறப்பது
கர்த்தரை வாழ்த்தென் றுரைப்பதொக்கும்
சால மாம்பயிர் தம்பயன் ஈவது
சாமிசெய் நன்றி யுணர்த்திமன்றோ? 7

---

## 2-ம் அதிகாரம்

### தமிழ்நாட்டுப் பெண்மைநெறி

கொண்டவன் அல்லாமல் இந்த உலகத்தில்
  கும்பிடு தெய்வம்வே றில்லையென்றே
பெண்களெல் கண்டு பணிவதற் காகவே
  பேசினர் நூலிற் பெரியோர்கள்.

தெய்வம் தொழாது கணவனைக் கண்கண்ட
  தெய்வம் எனத்தொழும் மாதுமழை
பெய்யென று சொல்லவும் அந்நேரம் பெய்யுமாம்
  பின்னென்ன பேசுவம் பெண்பெருமை.

மாசில் மடந்தையர் வள்ளுவர் இல்வாழ்
  மனைவியைப் போலவே தன்வீட்டு
வாசற் படியும் கடவாரே; மறு
  மாந்தரைக் கண்கொண்டு பாராரே!

அரசனுக் கோர்மகன் ஆனாலும் எந்த
  ஆண்மகன் காணினும் அஞ்சிடுவாள்:
புருஷனைக் கண்டால் எழுந்து வணங்குவள்;
  புத்திரர்க் குங்கால் மடக்குவளே!

அஞ்சு தினத்திற்குத் தன்விட்டாண்பிள்ளை
  அடுத்த வூருக்குப் போயிருந்தால்

மஞ்சட் குளியாள் மயிர்வாரான், மலர்
வாசம்பட்டாடை நகைதரியாள். 5

மட்டி மடைச்சி முழுமாடென்றவன்
வைத சினமிஞ்சி மூர்க்கத்தினால்
கட்டை எடுத்துப் புடைத்தாலும் அவள்
'கா'வென்ற சத்தமும் காட்டாளே. 6

நற்சுவை யாங்கறி வர்க்கங்கள் எல்லாந் தன்
நாயக னுக்குமுன் னம்படைத்து
எச்சி இலையுறும் மிச்ச மீதங்களை
ஏற்ற அமுதமென் றுண்பாளே. 7

கூடி இருவரும் போகையிலே அவள்
கூட நடப்பது கூடாதாம்
வாடிஎன் பின்னாலே என்றுசொல்லி அவன்
மாப்பிள்ளை கைவீசிப் போவாரே! 8

கன்னியைக் கல்யாணம் பண்ணிய வாலிபன்
கற்புநெறியைக் கடைப்பிடித்தால்
அன்னியர் பார்த்திடப் பெண்ணைத்தொடான் அவன்
யாரேனும் முன்னிற்கப் பேசானே. 9

அடிசிற் றினியவள் நல்லறங்கள் அன்னம்
ஆக்குவதுங் கறியாக்குவதும்

படிப்பு மடப்பள்ளிக் கூடத்திலாம் பெண்கள்
பண்டிதை யாவதற் கென்பாரே. 10

ஆடவர்க்குப்பெண் ணடிமையாம் ஆதலின்
அடி! போடி! வாடி! என் றேயழைப்பார்
ஓட ஓடியுழைத் தூழியஞ்செய்வதே
உத்தமிக்குச் செல்வம் என்பாரே. 11

பர்த்தா விழிக்குமுன் தான்எழுந் தேகித்தன்
பல்லை விளக்கிஇல் லம்பெருக்கி
கர்த்தாவைப் போற்றிபின் கட்டுமட் டாகவே
காலத்தாற் செய்வன செய்திடுவார். 12

---

## 3-ம் அதிகாரம்

### கல்வி

இந்திய மாதர்கள் பூர்வீக காலத்தில்
எற்ற படிகற் றுயர்ந்திருந்தார்
சந்த்ர மதிதமை யந்தி முதலான
தக்கவரே இங்கு சான்றுவார். 1

பரதகண் டம்பர தேசிகள் கைப்பட்ட
பாவத்தினாற்பல பண்பிழந்து

சரத மகிமை யிழந்தது பெண்கல்வி
சற்றுமில் லாமற் பறந்ததுவே. 2

இந்த வரலா றுணரா திடையிட்டோர்
ஏதேதோ தம்மனம் போனபடி
சிந்தைசெய் யாமலே செப்பினர் பற்பல
விதை யனையார் செவிசுடவே. 3

கல்வியி னால்அறி வுண்டானாற் பெண்கள்
கற்பு நெறிகடந் தேகுவராம்:
சொல்லுக் கடங்காமற் போய்விடு வாரென
சொல்லத் துணிந்தார் சிலபேர்கள். 4

எண்ணரக் கற்றும் எழுத்தற வோதியும்
பெண்புத்தி பின்புத்தி யாகுமென்பார்:
கண்ணற்றார் மூக்கின்மேற் கண்ணாடி போலும்
கணிதம் எழுத்துடன் பெண்ணுக்கென்பார். 5

என்றுமலே அன்றோ சொல்லிவிட் டார்தமக்
கேயிழி வென்றுணர்ந் தாரிலரே
மண்ணுந்தை போலும் விழிக்கின்ற பெண்ணுக்கு
மாப்பிள்ளை யாதற்கோ கல்விகற்றார்? 6

தண்ணீ ரளவாகுந் தாமரைத் தண்டந்தத்
தண்ணீர்க்கு மேல்தலை நீட்டிநிற்கும்

பெண்ணறி வோங்கித் தழைக்குமானால் மாப்
    பிள்ளைக் கதுபெரும் பாக்கியமே. 7

தோளுக் கிசைந்தவள் பெண்ணானால் நல்ல
    சொல்லுக் கிசைந்தவள் பெண்ணாமே
ஆளுக்கிசைந்தவள் பெண்ணானால் அறி
    வுக்கும் இசைந்தவள் பெண்ணாமே. 8

மாதர்க் குயர்கலை போதிப்பது மில்லை:
    மற்றவர்க் காவன செய்வதில்லை:
ஏதோ சிலர்செய்த கோதை எடுத்தெடுத்
    எல்லோரை யும்பழி பூணவைப்பார். 9

சேலைகள் கட்டிய மாதரை நம்பினோர்
    தெருவில் நின்று தவிப்பர் என்பார்:
வேலைநேர் கண்ணியை நம்பின பேரெல்லாம்
    வேட்டைநா யாகிக் கழிவர் என்பார். 10

பாட்டுப் படித்த கவிப்புலவர் செய்த
    பாடல்கள் மெத்த அநியாயம்
நாட்டுப்பெண் மேற்பல தூஷணைகள் சொலி
    நாவுங்கூ சாமலே பாடிவைத்தார். 11

தாயைப் பழித்த பெரும்பாவம் வந்து
    சாடாதோ பெண்ணைப் பழித்தாக்கால்;

காயைப் பழித்த பெருந்தோஷம் அதைக்
காய்த்த மரத்தையும் சாராதோ? 12

ஆய்தொடியா யாளைப் பழித்த கவிராயர்
அந்தரம் நின்று குதித்தாரோ?
தாய்தங்கை அக்கை யுடையவரேல் அவர்
தம்முடை மானம் மதித்திலரோ? 13

ஈங்கிவர் செய்திஇவ் வாறிருக்க இந்தி
யாவெனும் தாய்செய் தவப்பயனால்,
ஆங்கில மேலவர் ஆட்சிவரப் பெண்கட்
காதர வாய்க்கல்வி எற்பட்டதே. 14

இன்னமும் மாந்தர் அநேகர் படித்திலர்
என்றாலும் பெண்கல்விக் காமுயற்சி
மென்மேலும் ஓங்கி நடைபெறுகின்றதால்
மேன்மை குன்றாத வளர்பிறையாம். 15

---

## 4-ம் அதிகாரம்

### மஞ்சட் குளித்தல்

மக்கள் முகங்களில் மஞ்சளைப் பூசின்
மனது மகிழுங்கண் ணுங்களிக்கும்:

தூக்கம் அகன்றிடும் தூர்க்கந்தம் போய்விடும்
சோபனத் தூக்கும் குறியாமே. 1

பூவி னிறத்தில் சிறந்த நிறம்பசும்
பொன்னின் நிறமும் அதுவாகும்,
தேவலோகத்தின் நிறமும் அதாகும் செஞ்
சோதியும் மஞ்சள் நிறந்தானே. 2

கொஞ்சமாய் மஞ்சளைப் பூசிக்குளிப்பது
கோதை முகத்துக் கொளிதருமே:
மிஞ்சவே மஞ்சள் அரைத்தப்பிக் கொள்வது
வேஷந் தரிப்பதற் கொப்பாமே. 3

நீர்க்கோளை மாற்றுமே கண்வலி போக்குமே
நேராக மேல்வலி நீக்கிடுமே:
சீர்க்குணங் கள்பல மஞ்சளுக் குண்டவை
செப்பி விரிக்கும் இடமிதன்றே. 4

மஞ்சள் அழகும் அழகல்ல என்றதால்
மஞ்சட் கழகுண்டென் றேற்படினும்
நெஞ்சம் நிறைதரு கல்விக் கிதுசற்றும்
நேராக தென்றறி நாட்டுப்பெண்ணே. 5

---

## 5-ம் அதிகாரம்

### நகையணிதல்

மண்ணி லிருப்பவர்க் காசையுண் டவ்வாசை
   மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை
பெண்ஆசை கொள்வ தெதன்மேலே அந்தப்
   பீர்க்கம்பூ வின்நிறப் பொன்மேலே. 1

ஆடை அகத்தியம் எல்லார்க்கும் அதன்
   மேல்அணி பூண்பதும் ஒரழகே
கூடை அடுக்கெனக் கொண்டமட்டும் நகை
   கோத்து விடுவது கோதாமே. 2

சுந்தர மான முகத்திற் கிரண்டொரு
   சோதி மணிநகை சுந்தரமாம்
அந்தம் இலாதவட் காயிரம் பூண்டாலும்
   அழகுண் டாகுமே நாட்டுப்பெண்ணே. 3

இயற்கை அழகுள்ள பெண்மணிக்குச்சில
   எற்ற நகைகள் எழில்தருமே:
இயற்கை நலமே யில்லையெனில் செய்யணி
   என்ன வுங்குணஞ் செய்யாதே. 4

அழகு தராம லிருந்தும் நகைகளை
ஆசையி னாற்சிலர் பூட்டிக்கொள்வார்
கிழவிக ளாகி நரைத்தவ ருங்கூடக்
கேட்டிர வல்வாங்கி மாட்டிக்கொள்வார். 5

மருந்துக்குப் போறவள் உள்ள நகைஎல்லாம்
மாட்டிக்கொண் டப்பால் வெளிப்படுவாள்
விருந்துக்குப் போறவள் வீடுவீ டாகப்போய்
வேண்டாத தும்இர வல்கேட்பாள். 6

மின்னினாற் போதும் எதுவேனும் வாங்கி
மேலிலும் காதிலும் போட்டுக்கொள்வார்
பொன்னென்ற சொன்னாலும் போதும்உள்ளே கரும்
பொன்னெனினும் சுமைக் கஞ்சாரே. 7

தின்னில் அழிந்துபோம் உண்ணில் அழிந்துபோம்
சேலை யுடுத்திக் கழித்தழியும்
பொன்னழி யாது நகையழியா தந்தப்
பொன்னிற் பணமெல்லாம் போடுமென்பார். 8

குப்பையைச் சீத்துப் பொருக்கையிற் காலிலே
கோளி விலங்கிட்டுக் கொள்வதுபோல்
ஒப்புறுங் கால்களில் பாதசர முதல்
ஒய்யார மான விலங்கிடுவார். 9

கோக்கண மத்தியில் தொந்தரை செய்கின்ற
கொண்டைமாட் டைப்பிடித் தேயுறக்கி
மூக்கணைத் தாம்பினைக் கோத்தது போலத்தம்
மூக்கைத் துளைத்துப் புலாக்கிடுவார். 10

செங்கதிர் வீசிடும் செம்பு மாணிக்கங்கள்
சேர்த்திழைத் திட்ட பல நகைகள்
அங்கம் எல்லாம் அணிந்தென்பயன் உள்ள
அழகைக் கெடுத்திடு மானுக்கால் 11

காது நகையைக் கழற்ருரே சிலர்
காணும் அழுக்கும் துடையாரே
ஊது பிணம்போலக் காதுகள் நாறினும்
ஊத்தையைப் போக்க முயலாரே. 12

எப்போதும் காதில் கழுத்தில் கரத்தில்
இடைவிடாமல் நகை போடுவதால்
தப்பாமற் சேதமாம் ரத்தினக் கல்லுக்கும்
தங்கம்பொன் வெள்ளி பணத்துக்குமே. 13

தேய்ந்திடும் பாதி தெரித்திடும் பாதி
தெருவில் அறுந்து விழும்பாதி
காய்ந்ததிற் பாதி உரைத்ததிற் பாதிபொற்
கம்மியர் கொள்வர்செம் பாதியுமே. 14

காதினில் ஒன்றும் கழுத்தில் ஒன்றும் முன்
   கைகளில் ஒன்றுமாம் மூன்றணியே
போதா என் பார்பெண்கள் கல்வியணிகளைப்
   பூரணமாய் நன்கு பூண்டிடினே. 15

---

## 6-ம் அதிகாரம்

### பூச்சூடல்

பூவைப் போல் இந்தப்பூ லோகத்திலே ஒரு
   பூரணமான அழகில்லையே:
தேவைப் புசித்தற்குச் சிருள்ள நற்பொருள்
   தேடி யெடுப்பதும் பூவாமே. 1

பூவில் இருப்பவள் சீதேவி வெள்ளைப்
   பூவில் இருப்பவள் வாணியென்பார்,
பூ வண்ணம் பூக்குங் கொடிக்கழகு காதல்போல்
   பூச்சூடல் பூங்குழலார்க் கழகாம். 2

சந்தனம் புஷ்பம் சவ்வாது சுகந்தங்கள்
   சந்தோஷ வேளைகட்கே சிறப்பாம்
எந்த நாளும் மிகவே உபயோகித்தல்
   இல்லற நங்கைக் கிணக்கமன்றே. 3

ஈரும் பேனும் தலையிற் கலிக்கக் குளிப்
   பின்றி உடல் அழுக்கால் நிறையச்
சீரெனப் பூ நிதம் சூடி அலங்காரம்
   செய்து திரிவது பேதமையே. 4

மங்கலமாவதும் பூவாமே மண
   மக்களணிவதும் பூவாமே:

பொக்கொளி செய்வதும் பூவாமே நற்
பொழிதில் மலர்வதும் பூவாமே. 5

---

## 7-ம் அதிகாரம்

### தாம்பூலம்

வெற்றிலை பாக்குடன் சுண்ணமும் சேரில்
வெகு நற்பயன் தரும் என்றறிந்தோர்
சுற்றிலையாகச் சுருள்செய்து வைத்துச்
சுபகாரியத்தில் வழங்குவரே! 1

இன்பம் கொடுப்பதும் தாம்பூலம் அதில்
ஏலம் கிராம்புகள் கூட்டிக்கொண்டால்
தெம்பு கொடுக்கும் முசிப்பாற்றும் பின்னும்
செம்பவளம்போல் உதடாக்கும். 2

சாப்பிட்ட வாய்க்கொரு தாம்பூலம் மற்றும்
சந்தோஷ வேளைக்கோர் தாம்பூலம்
ஆப்பட்ட போதெல்லாம் ஆட்டுரல் போலவாய்
ஆட்டிச் சுவைப்ப தழகல்லவே. 3

மலையாடு பைந்தழை மேய்வதுபோலவே
வாங்காமல் வெற்றிலை மெல்லாதே,
மலையாளரிற் சிலர் செய்வது போல
மடியிற் படிக்கமும் வைக்காதே. 4

களிப்பாக்கோ மல சுத்திசெய்யும் சுண்ணம்
கண்டித்துணவை செரிக்கச் செய்யும்
தளிர்ப்பான வெற்றிலை தாதுவிர்த்திதரும்
தப்பாதிம் மூன்று குணங்களுமே. 5

## 8-ம் அதிகாரம்

### பண்டமுறை வைப்பு

எப்பொருள் எவ்விடத் தெவ்விதமாக
இருத்தல் அழகென் றறியாதார்
சப்புஞ் சவறும் தகாத நார்க்குப்பையும்
சாப்பிடும் தானத்தில் போட்டுவைப்பார். 1

மாடக் குழியிற் பணம் நகைவைத்து
மறந்துபோய் வீடெங்கும் பார்ப்பாரே
தேடித் தேடி ஒரு சாமம் திரிந்து
தெருவிற் புழுதி எல்லாம் புடைப்பார். 2

பானைக்கிடுக்கில் ஓர் பண்டத்தை வைத்தவள்
பக்கத்து வீட்டிலே போய்க்கேட்பாள்
பூனை குடித்ததால் பாலைக்காணுமல் தன்
பிள்ளைவாயை மோந்து பார்ப்பாளாம். 3

கட்டின சேலை துணிமணி எல்லாம்
கதவிலே போடுவார் பின்பாரார்
பெட்டியிற் பட்டுடன் சர்க்கரைக்கட்டி நெய்ச்
சிட்டியும் பேணியே வைத்திருப்பார். 4

ஒவ்வொன்றிற் கொவ்வோரிடங் குறித்தே
ஒழுங்காக முறைப்படி வைத்திருந்தால்
எவ்வேளை எது வேண்டுமானாலும் உடன்
எடுத்து வழங்கற் கிசைவாமே. 5

---

## 9-ம் அதிகாரம்

### பிள்ளைவளர்த்தல்

மக்கட்பேறே பெரிதென்றாலும் தங்கள்
மக்களை நல்வழியில் வளர்த்தல்
முக்கியமானதே இம்மை மறுமைக்கும்
முத்திக்கும் வித்ததுவாகுமன்றோ? 1

உள்ளதை என்றும் ஒழியாமற் சொல்லலும்
ஊருடன் கூடி வாழும் நெறியும்
தெள்ளமுதாய்க் கொள்ளும் வண்ணம் உன் மக்களைத்
தேற்றிவைப்பாய் தமிழ் நாட்டுப்பெண்ணே 2

சுற்றியிருக்கும் பொருளின் குணங்களைச்
சுட்டி உசாவி அறிதல் நன்றே
பற்றி அறிந்திடப் பாலர்கள் கேட்பதைப்
பாங்குடன் சொல்வது பண்பாமே. 3

அழுகிற பிள்ளையைத் தான் எடுக்காமல்
அலுவல் பெரிதென்று பார்த்திருப்பாள்:
முழுதும் வேலை முடிந்தபின் கண்மணி
முத்தென்றெடுத்தவள் கொஞ்சுவாளே. 4

பத்துமாசத்துக்கு மேற்பட்டால் கன்றுக்குப்
பாலைக்கொடாது பசுமாடு
முற்றிய பிள்ளை தாய் பாலைக்குடிப்பதால்
முட்டாளாவ தநுபவமே. 5

முப்பது மாதத்திற் கப்பாலே தாய்ப்பால்
முழுதும் நிறுத்துதல் ஒருதலை; மேல்

முப்பொழு தல்லது நான்கு போதேனும்
முறையாகச் சோறூட்டல் பாங்காமே. 6

சோச்சிதா என்று தன் பிள்ளை யழுதிடில்
தொந்தரை நீக்கக் கருதியவள்
பூச்சிக் காரன் இதோ வந்துவிட்டான் உள்ளே
பூந்து பதுங்கெனப் பொய்யுரைப்பாள். 7

காச்சுப் பூச்சென்று தன் பிள்ளைகள் கத்தினால்
கண்டிப்புச் செய் முறை செய்யாமல்
பூச்சாண்டிக் காரனைக் கூப்பிடென்பாள் அந்தப்
பிள்ளைகள் அஞ்சிப் பதறிடவே. 8

தொட்டிலிற் போட்டாட்டும் பிள்ளை தன் கண்மூடி
தூங்காமல் தொந்தரை செய்தாக் கால்
கிட்ட வந்தானிதோ பிள்ளை பிடிக்காரன்
கீச்சென்றழாமல் நீ தூங்கிடென்பாள். 9

பேசாமல் போம் வழிப்போக்கனை பார்த்திந்தப்
பிள்ளையைக் கொண்டுபோ வென்பார்கள்
மீசையும் தாடியும் உள்ளோனைக் காட்டி
மெதுவாகப் பூச்சாண்டி யென்பார்கள். 10

ஒன்றுமறியாத பாலர் மனதை,
உடைத்துப் பயங்களினால் நிறைத்து
என்றும் பயங்காளிப் பிள்ளைகளாக்கி
எதற்கும் பயப்படச் செய்வார்கள். 11

காயும் நிலாவில் மரம் அசைந்தாலும்
கருமுனிப்பே யென்று காட்டுவரே:

நாயும் இருட்டிலே ஓடிடில் பிள்ளை
  நடுங்கக் கரும் பிசாசென்று சொல்வார். 12

மருண்டு திடுக்கிட வீண்கதை கட்டிநம்
  மக்கள் செவிப்படச் செய்துவிட்டால்
அரண்டவன் கண்ணுக் கிருண்டதெல்லாம் பேய
  தாகவே தோன்றல் இயல்பாமே. 13

வீண்பிள்ளை ஆம்படி பெற்றவர் பாலர்க்கு
  வீணான அச்சத்தை ஊட்டுவதால்
ஆண்பிள்ளைக்குத் தக்க அஞ்சாமை தீரம்
  அடியோடு போய்விடும் ஆரணங்கே. 14

உண்மை யுரைத்தலும் மெய்யன்பும் உள்ளத்தில்
  ஊன்றிடப் பிள்ளைகளை வளர்த்தால்
பெண்மைக் கடமை நிறைவேறும் இனிப்
  பேரின்ப வாழ்வும் பெறலாமே. 15

---

## 10-ம் அதிகாரம்

### அன்பு

அன்பே உயிர்நிலை அன்பே உளநிலை
  அன்பே உலகியல் ஆகுமன்றே!
அன்பே அருள் மூலம் அன்பே அறமூலம்
  'அன்பேசிவம்' என்றறிந்தோமே. 1

அன்பின் இயலை எல்லாரும் உணரவே
  ஆண்டவன் மக்கட்பேறிங்கமைத்தார்

அன்பின் உளவை முகங்காட்டும் அதின்
ஆற்றலையார் எடுத்தோதவல்லார்? 2

அன்பெனும் ஆனந்த ஆழியின்பேரமு
தள்ளி உள்ளார அருந்தினவர்
இன்பமுணர்ந்தவர் ஏனையர்தம் பொருள்
என்பயன் கண்டு நுகர்ந்தாரே? 3

அன்பெனும் தீங்கனி ஒன்றை அருந்தியே
ஆனந்தமாகி அகங்குழைந்தார
இன்பமேஇன்பம் மற்றென் பொருளாயினும்
இத்தனை இன்பம் அளிப்பதின்றே 4

பராபரன்பார் முதல்யாவும் படைத்துப்
பராமரிக்கின்றதும் அன்பாலே
சராசர வஸ்துக்கள்தத்தம் இடத்திலே
தாபரிக்கின்றதும் அன்பாலே 5

காணுதெய்வமும் கண்ணுக்குத்தோன்றியே
கட்டுப்படுவதும் அன்பாலே
வாணாளிலே நயவாழ்க்கையும் வண்மையும்
வாய்ப்பதும் அந்தமெய்யன்பாலே. 6

என்பிலே ஊன்புகுந்தெங்கும் உலாவியே
எல்லாம் உடல்மயமாவதுபோல்
அன்பிலே மன்றுயிர்தான் விளங்கும்
அந்த அன்பொழிந்தால் உயிரும் ஒழியும் 7

அன்புபலவிதமானாலும்உயர்,
ஆண்பெண்ணின் அன்புபேரன்பாகும்
இன்பம் பலவிதமானாலும் காதல்
இல்லற இன்பமே மேலாமே 8

உள்ளன்பில்லாதவன் வாழ்க்கையும் வாழ்க்கையோ
ஊர்ப்பன்றிகுட்டிகள் போட்டதுபோல்
கள்ளமனத்தவள்பிள்ளைப் பெற்றென்பயன்
காட்டுமிருகத்தின் கூட்டுறவே. 9

தேகம் இரண்டாயிருந்தாலும் உள்ளே
தேங்கும் உயிர்கள் ஒன்றாய்விளங்கும்
பாகுமொழியவள் காதலினால்வரும்
பாக்கியம் பேரின்பவாழ்வாமே 10

---

## 11-ம் அதிகாரம்

### விருந்து

பூமியில் மானிடர் கூடியிருத்தலே
புண்ணியலோகத்திருப்பாகும்
சாமிஇதற்கென்றே ஆணையும்பெண்ணையும்
சம்சாரவாழ்வில் அமையவைத்தார் 1

பத்துப்பேர் வீட்டில் வருவதும் போவதும்
பத்தினியாள் நற்குணத்தாலே
செத்தபின் மக்கள் மனிதரை நண்பரைத்
தேடியிருந்திடல் கூடுவதோ? 2

வாராவிருந்துகள் வந்தாலும்தன்
மனதிற்சலிக்கவே மாட்டாளாம்
ஆராகிலும் வருவார்கள் என்றெண்ணியே
ஆழாக்கேனும் கூடப்போடுவளாம். 3

பொய்யுபசாரங்கள் செய்யாளேவெறும்
போலி ஆசாரங்கள் காட்டாளே
'ஐய்யர்க்கமு' தென்று சொல்லுமுன்னேகுறிப்
பாய்ந்தவர் வேண்டும் வகைபடைப்பாள். 4

வாயுபசாரங்கள் செய்யாளேவெறும்
வாயினல்பாயசம் வார்க்காளே
தாயூட்டும் தன்மைபோல் தாரதன்மியப்படி
தான் உண் உணவையும் தந்திடுவாள் 5

சொல்லேச்சுருக்கி மெய்யன்புடன் செய்கையால்
தூண்டும் விருந்தே சுகவிருந்தாம்
புல்லேச்சமைத்தும் பொருந்தி உள்ளன்புடன்
போடும்விருந்தே பெருவிருந்தாம். 6

உண்ணும் உண்ணும் என்றுரைப்பதினும் ஒரு
உத்தமி செய்மறையாதெனிலோ
தண்ணீர் கொடுப்பதும் கால்சுத்திசெய்கையில்
தான் போய்ப்படைத்தெதிர்பார்ப்பதுமே 7

பாத்ரம் அறிந்திடல்பாங்காகும் பெண்ணைக்
கோத்திரம்பார்த்துக் கொடுப்பதுபோல்
யாத்திரை செய்பவர் எற்றதுரவிகள்
யாராகிலும் அவர்க்கிட்டுண்கவே. 8

## 12-ம் அதிகாரம்—இன்சொல்

இன்சொல் தமிழுக்கியல் பெனினும் நயம்
எற்ற கருத்தளவால் அமையும்
புன்சொல்தவிர்தல் பொருள் நயம்பேணல்
பொருந்திடும் அன்பகமாதருக்கே 1

அந்நியன் உன்னைமதித்துப் புகழ்ந்துன்பால்
அன்பாகப்பேசி விரும்புவையேல்
முன் நீ அவனிடம் அவ்விதம்பேசுதல்
முக்கியமான உபாயமம்மா 2

வெடுக்கென்றுரைத்தலும் ஆகாதே பெண்கள்
வீம்புகள் பேசலும் ஆகாதே
தடுக்காகப்பேசலும் ஆகாதேவெளித்
தூறல் ஒருக்காலும் ஆகாதே. 3

இனியகுரலுடன் பக்திவிநயமாய்
எற்கும்படி செவிக்கின்னமுதாய்
பனிமலர்போலும் முதத்தோடுபேசுதல்
பத்தினிப்பெண்ணுக்கழகாமே. 4

காசுபணந்தரல் ஏலாதபோதிலும்
கையால் இயலாதகாலத்திலும்
மாசிலாமென் மொழிபேசுதற்கென்தடை
மற்றதுசெய்யபின் மகிழ்விக்குமே. 5

இன்சொற்பெருமை என்னென்றுசொல்வேன் வல்
இடும்பரையும் சற்றேசேர்படுத்தும்

வன்கொலை செய்யவருபவன் தன்னையும்
  மாற்றிமனதைத் திருப்புமன்றே 6

---

## 13-ம் அதிகாரம்—மாமியின் கொடுமை

மாமியார்க்கேற்ற மருமகளும் மரு
  மகளுக்கேற்ற நல்மாமியாளும்
பூமியிலே இல்லை என்பார்கள் இவை
  பொய்யல்லப் பொய்யல்ல பொய்யல்லவே 1

பூமியிற் பெண்ணாய்ப்பிறந்தவர்யாவர்க்கும்
  பொதுவாகத் துன்பமுண்டென்றாலும்
மாமியராற்படும் பாடுகளுக்கோர்
  வரையனை யில்லை எனலாமே. 2

கொண்டவனைப் பெற்ற தாயாரே தன்னைக்
  கொடுமைகளோடு நடத்துகையில்
அண்டிவந் தாதரிப் பாருமுண்டோ அந்த
  ஆதரவற்ற மருமகட்கே! 3

கொண்டையை எட்டிப் பிடித்திழுப்பாள் குட்டுக்
  கோல்கொண்டு குமும் போடத்துணிவாள்
மண்டையிற் காயம் படும்படி குட்டுவள்
  வன்சினம் தீரப்புடைத்திடுவாள் 4

தன்னுடைமாமியார் முன்னொருகாலத்தில்
  தன்னைப்படுத்தியபாட்டையெல்லாம்

தன்னுடைவீட்டுக்குவந்த மருகியைத்
  தப்பாமல் குற்றம்படுத்துவளே 5

உத்திரவில்லாமல் தன்மகனோடவள்
  ஓர்தரமாயினும் பேசவளேல்
மத்தோதுடைப்பமோ வந்ததைக்கைகொண்டு
  மாமிமருமகளைப்புடைப்பாள் 6

மாமியார்கையால் உடைந்தாக்காலது
  மண்ணாலேசெய்த ஓர் ஓட்டைச்சட்டி
பாவி மருமகள்தானுடைத்தால் அது
  பத்தப்பொன் என்பள் பொல்லாமாமி 7

மாமியாள் கட்டிக்கழித்ததைத் தைத்து
  மருமகளைக் கட்டிக்கொள்ளச்சொல்வாள்
மாமிகள்போட்டுக்கழித்த தாம்பூலம்
  மருமகள் போடல்வழக்கம் என்பாள். 8

மாமியாள் ஊற்றியகஞ்சியோ கூழோ
  மருமகள்பேசாமல் உண்கவென்பாள்
மாமியார் ஆற்றில் விழும்படிசொன்னால்
  மருமகள் வீழ்தல்கடமை என்பாள்: 9

இவ்வாறுகூறிய மாமி கொடுமைகள்
  எல்லாரிடத்திலும் உள்ளவல்ல:
எவ்வாறேனும் இவற்றிற்சில-சில
  எந்திழையாரிடம் காண்போமே. 10

---

## 14-ம் அதிகாரம்—மாமிக்கு நல்லுரை

கொழுகொம்பு பற்றிப்படர்ந்து சிறக்குங்
கொடியை அறுத்துவிடலாமோ?
கொழுநன் மெய்க்காதலைப்பற்றி வாழும்பைங்
கொடியைப் பிரித்துவிடலாமோ? 1

பூத்திருக்குஞ் செடிமீதினிலேபடர்
பூங்கொடி பற்றிச்சிறந்தாற்போல்
பார்த்துமகிழ்ந்திடப் பெண்ணுடன்பிள்ளையைப்
பக்கத்தில்வைப்பவளே மாமி. 2

எங்கள் மருமகட்கீடில்லை என்றபின்
ஏற்றமொழியால் அறிவூட்டி
மங்களவல்லி மீதாண்மகனுக்கன்பு
வாய்ந்திடச்செய்பவளே மாமி 3

தன்மனையான பூவேமலர்ந்தன்பாய்த்
தனக்குப்பரிமளமாயிருந்தால்
பின்னொரு பூவில் மகன்மனம்போகுமோ
பேதைகளாகிய மாமிகளே 4

ஆற்றுத்தண்ணீர் அகத்தே ஒரு பொற்குடத்
அன்போடுண்ணற்கமைந்திருந்தால்
வேற்றுநீர் தேடி உன் ஆண்மகன் போவனோ
வேறினிச்சொல்வதென் மாமிகளே 5

மாறுத அன்பழகான மடந்தையுன்
மைந்தனுக்கேற்ற கரும்பானல்
வேறுனமாதைக்கனவில் எண்ணுன்வேண்டி
வந்தாலும்வேம்பென்றுதள்ளுவனே 6

அஞ்சுதல் பெண்ணுக்கழகென்றுபேச
வொட்டாமல் அடக்கி ஒடுக்கிவைத்தால்
பிஞ்சில் உண்டாகாத அன்பிருபெருக்கும்
பின்னால்உண்டாகுமோ மாமிகளே 7

வீட்டிற்பிறந்த மணமகளோடுபோய்
வேற்றூரில்வாழும் உன் பொன்மகளை
'நாட்டுப்பெண்' என்றிழிவாய் அவள்மாமி
நடத்திவருத்தல் விரும்புவையோ? 8

மகனுக்குவந்த மணமகள் ஆசையால்
மருமகள் என்னும் பெயர்படைத்தாள்
அகத்துக்குடையவள் ஆஸ்திக்குடையவள்
ஆசையால் நாட்டுப்பெண் வீட்டுப்பெண்ணே 9

மாமியின்தானத்தை நேர்வாரிசாய்
வகிப்பவள் நாட்டுப்பெண்ணாதலினால்
பூமியில் மாமிக்குரியவள் மருகிபோல்
போற்றுதற்காருளர் மாமிகளே 10

---

## 15-ம் அதிகாரம்—மருகியின் தீமை.

மாமியின் தோரணையான அதிகாரம்
மட்டுமிஞ்சிச்செல்லும் என்றாலும்
மாமியைத்துன்பப்படுத்தும் மருமகள்
வையகத்தில்லையோ நாட்டுப்பெண்ணே! 1

தான்வணங்கத்தகும் நாயகனைப்பெற்ற
தாயை வேலைக்காரிபோல் மதிப்பாள்
என் இவள் என்னிதம் வேலைசெய்தாலென்ன
என்றிழிவாய்ப்பல பேசுவளே. 2

நாயகன் தன்னை நயந்துகொண்டாலும் தன்
நாவடக்காமல் பேசத்துணிவாள்
தாய்க்கும் இப்பேய்க்கும் இடையில் அகப்பட்ட
தம்பிபடுந்துயர் மத்தளமே. 3

சொல்லாத வார்த்தையும் சொல்லுவள் நாயகன்
தூயமனமும் கலங்கவைப்பாள்
பொல்லாத மாமிஎன் றெல்லாரிடமும் போய்
பொய்யாம்பழி பல பற்றவைப்பாள். 4

தன்மகன் தன்கருவுற்றிடும் நாள்முதல்
தக்க வயதுவரை வளர்த்த
அன்னையைப் பின்வந்த மின்னிடையாள் தொட்ட
அன்றே பிரிக்க வகைபார்ப்பாள். 5

அடுப்பும் அடுக்கும் வேறானால் அன்றி இன்
றடியாள் சமைக்க முடியாதென்பாள்:
இடுப்பொடிய வேலை செய்யத்தலைவிதி
என்ன? என் தாய்வீடு செல்வேன் என்பாள். 6

---

## 16-ம் அதிகாரம்—மருகிக்கு நன்மொழி

பெற்றதாய் தந்தை பிறவியுற்றோரைப்
பிரிந்தொரு காதலனே கதியாய்
முற்றஉறுதி யாய்ப்பற்றிய பாவையே
முன்சில நன்மொழி பேசுவன்கேள்: 1

கொண்டவன் உன்தெய்வ மானக்கால் பெற்ற
கோதை குலதெய்வம் ஆகாளோ?
தொண்டவனுக்கு நீ செய்வதுபோல் ஈன்ற
தோகைக்கும் செய்தல் கடமையன்றோ? 2

தன்மணவாளனைப் பெற்றவள் தன்னையும்
  பெற்ற நற்றாய் எனவே கருதி
நன்மனதோடு நயந்து நடப்பையேல்
  நல்லதாய் போலுனை ஆதரிப்பாள் 3

எத்தனை தான்கட்டு மெட்டாயிருந்தாலும்
  புத்திரப் பேறு விரும்பாயோ?
புத்திரன் பெண்சாதி உன்னைவருத்தங்கால்
  போக்குனக் கேதப்போ தென்செய்வையோ? 4

கும்பிடு தெய்வத்தைத் தன்னுள் அடக்கிய
  கோயிலைப் பேணிப் பணிவார்போல்
அன்பிலா மாமி என்றாலும் அடிதொழு
  தன்பை யுண்டாக்குவாய் நாட்டுப்பெண்ணே. 5

---

## 17-ம் அதிகாரம்—சண்டை

சண்டைச் சாவற்கோழி வாலையுருவியே
  சண்டைக்கு மூட்டிவிடுவார்போல்
அண்டை விட்டாருடன் சண்டை போடச்செய்வர்
  ஆவதுபோல அழிவுசெய்வார். 1

பத்தினி சற்குணி பார்ப்பவர்க் குத்தமி
  பக்கமனைப் பேதைப் பெண்டுகளோ
குத்திவிட்டொன்றும் அறியாதவள்போலக்
  கூடநின்றே வேடிக்கை பார்ப்பாள். 2

தேவன் திருவுளமாகி மறைத்ததைத்
  தீரத்திறந்து மொழிந்திடுவார்;
பாவம் நிறைந்த பழிமொழியைப்பெற்ற
  பாலர்க்கும் சொல்லிப் பழக்கிவைப்பார். 3

மெத்தை வீட்டுச் சீமாட்டிகளுங் கூட
  ஒத்துவாழ்வின்ற தரிதாமே
கொத்தமல்லி மிளகாய் புளி உப்புக்கும்
  கூத்தாடிச் சண்டை தொடுப்பாரே. 4

பத்துப்பேர் ஆண்பிள்ளை கூடியிருந்தாலும்
  பண்பாயிருப்பர் பகையறியார்:
புத்திகள் எத்தனை சொன்னாலும் ஓரிரு
  பெண்கள் ஒருவீட்டில் வாழ்வரிதே. 5

இல்லினிற் சுத்திதம் தேகசுத்தி முதல்
  எவ்வித சுத்திகளும் புறம்பே
சொல்லில் மனத்தில் தம்செய்கையில் சுத்திகள்
  தோன்றுவதான்ம சுக சுத்தியாம். 6

---

## 18-ம் அதிகாரம்—வீண்பேச்சு

'ஆப்பிரிக்கா' என்றொரு தேசம் மிகுந்
  தங்கேயிருப்பவர் காப்பிரியர்
காப்பிரிப் பெண்களுக் குள்ளவழக்க மோர்
  காலமும் சும்மா இரா ராமே. 1

பேசாமற் சும்மா இருப்போரைப் பெரும்
  பேயெடுத்துக்கொண்டு போய்விடுமாம்
போசனமின்றி இருந்தாலும் அவர்
  பேசாதிருத்தல் முடியாதாம். 2

சீமையின் வர்த்தமானங்கள் தெரிந்திடத்
  தேடிப் படிப்பார்கள் பத்திரிகை
பூமியிலே மறைசெய்தி அறிந்திடப்
  போதமே பாரதப் பெண்ணொருத்தி. 3

தீ யெடுக்கப்போன பெண்பிள்ளை யூர்க்கதை
சிந்தைமகிழவே செப்பி நிற்பாள்
மேய்கின்ற மாட்டைப்போய் நக்கிடும் மாடுகள்
மேய வொட்டாமற் கெடுப்பதுபோல். 4

விளையாட்டுப் பிள்ளைகள் வீட்டில்வரின் உங்கள்
வீட்டிலே செய்கதி என்ன என்பார்
தொளையாடும் வண்டுபோல் பின்னும் பலவாய்த்
தொளைத்துத்துருவி வினவுவரே. 5

அண்டை வீட்டில் எதிர் வீட்டில் நடக்கின்ற
அந்தரங்கங்கள் அறிந்து கொள்வார்
சண்டைகள் நேரிடுங் காலத்திலே அவர்
சற்றேனும் கூசாமல் தூற்றுவரே. 6

வேற்றூர்வீட்டு வேலைக்காரர்கள் வந்திடில்
வெற்றிலை பாக்குங் கொடுத்திருத்தி
மாற்றூர் அறிந்திடும் வண்ணமா யங்கவர்
வீட்டில் நடந்ததைச் சொல்லும் என்பார். 7

கிண்டிக்கிண்டிச் செய்தி கேட்பாரே பின்னும்
சேராத காரியமும் கேட்பார்
குண்டுணி கோள்கள் உரைப்பவருக்குக்
குறணி பதக்கும் கொடுப்பாரே. 8

தன்வீட்டுக் காரியம் பார்ப்பவள் பெண்மணி
சட்டக்குடித்தனப் பாங்குடையாள்
அன்னியர் வீட்டுக்கு வீண்போகாள் அவள்
ஆகாதவை ஒன்றும் பேசாளே. 9

புண்ணிய மாதொருக்காலும் எவள்மேலும்
பொல்லாத வார்த்தை புகன்றறியாள்

கண்ணினாற் கண்டதும் சொல்லாளே சும்மா
காதினாற் கேட்டதை நம்பாளே. 10

கோட்சொல்லும் நாவுள்ள மங்கையர் காற்றுடன்
கூடுநெருப்பிற் கொடியாரே
கோட்சொல்லைக் கேட்கின்ற பாவமக் கோளினைக்
கூறும் செயலிற் கொடிதாமே. 11

மெலிந்த சொற்கூறி யிகழாதே மேலும்
வேறெவர் சோலிக்கும் போகாதே
மலிந்த பண்டங்கள் சந்தைக்குவரும் என்றே
வாய்மூடிக் கொண்டிரு நாட்டுப்பெண்ணே. 12

---

## 19-ம் அதிகாரம்—கெட்ட சம்பாஷணை

கெட்ட கதைகளைப் பாடலைச் சற்றேனும்
கேட்பது மங்கைக் கடுக்காதே
நட்ட பயிரிலே பூச்சி விழுந்தாற்போல்
நன்னெறி தப்பிக் கெடுவாரே. 1

சிற்றின்பப் பாடலைக் கேட்பதும் பாவமே
தீச்செயலுக்கது காரணமே
குற்றமுறும் இடக்கான மொழிகளைக்
கூசாமற் சொல்வோர் கொடியோரே. 2

தொட்டாற் பிசின்போல ஒட்டும் என்றஞ்சியே
துட்டரை நல்லவர் கிட்டார்கள்
கெட்ட சம்பாஷணை நட்டந்தருவதால்
கெட்டவரோ டுரையாடார்கள். 3

தன்னைத்தான் காப்பதும் அன்றியே தன்னுயிர்
நாயகன் தன்னையும் காப்பதுபோல்

தன்னும் மனநிறை காப்பது மன்றித்தன்
சொல்லையும் காப்பவள் உத்தமியே. 4

சற்குண மங்கையர், தண்டாமரையிலை
தங்கியும் ஒட்டாத நீர்த்துளிபோல்
துற்குணத் தங்கையுடன் தங்க நேரினும்
துற்குணம் ஒன்றும் பழகாளே. 5

தீச்செயலாலே தம் சீர்கெட்ட பேதைகள்
தேசத்திலே பலர் என்பார்கள்
பேச்சுக் கொடுத்துப் பழகினதே அந்தத்
தீச்செயலுக்கு முன் காரணங்காண். 6

பேச்சினாலே பெருந் தீமைகள் நேரினும்
பேச்சுக்கு மூலம் கண்ணென்றறிந்து
மாட்சிமைதங்கிய மாதர் தம்பாத
மலர்விரல் நோக்கி நடப்பாரே. 7

---

## 20-ம் அதிகாரம்—தாயின் அருமை

தாயிற் சிறந்ததோர் கோயில் இல்லை சொந்தத்
தந்தையைக் காட்டியதும் தாயே
தாயிவள் என்பதில் யார்க்கும் ஐயமில்லை
தாய்படும் பாட்டிற் களவில்லையே. 1

காரணம் ஓர்சிறிதால் தந்தை யாகலாம்
காக்கை பனம்பழம் வீழ்ப்பதுபோல்
தாரணியில் ஒரு பிள்ளையேனும் உண்டோ
தாய் துயரின்றிப் பிறந்ததுவே. 2

பிள்ளைப்பே றென்பது பேச்சுக்கெளிதுதான்
பேராபத்தான செயலதுவே

பிள்ளைப் பெற்றுப் பிழைத்தாள் எனப்பேசுஞ்சொல்
பேற்றின் அருமை விளக்கிடுமே. 3

பிள்ளை பிணியில் வருந்துகையில் பெற்ற
பேதை படுந்துயர்க் கெல்லையுண்டோ?
நள்ளிரவுங் கண் துயிலாமல் மெய்
நலிந்து மெலிந்து வருந்துவளே. 4

என்னத்தினுல் இந்த தேசத்தில் தாய்மாருக்
கேற்ற மதிப்புகள் இல்லை என்ருல்
பன்னும் மெஞ்ஞான ஒழுக்கம் தருங்கல்வி
பாவையர்க்கில்லாத பாவத்தினுல். 5

ஆதலினுல் வயதாயினும் நூல் பல
ஆராய்ந்தறிவது சால நன்றே
ஓதலை யொப்பதிங் கேதுள தின்றென
ஓர்ந்து கற்பாய் எங்கள் நாட்டுப்பெண்ணே. 6

---

## 21-ம் அதிகாரம்—பேய் மயக்கம்

இருட்டினில் ஏமத்தில் போனுக்கால் உன்னை
ஏதேது செய்யுமோ பேய்கள் என்பார்
குருட்டு மனிதர்க் கெப்போதும் இருட்டாச்சே
கொள்ளிப்பேய் செய்ததென் கூறுவையே. 1

பேய்கள்வந் துன்னையும் என்னையும் பற்றிப்
பிடித்துயிர் கொல்லுதல் கூடுமென்ருல்
காயும்பகல் வரக்கூடாதோ சுத்தக்
காரிருள் பார்த்து வருவானேன். 2

சண்டிப் பிசாசுக்குத் திரமிருந்தால்
சபை நடுவே வரலாகாதோ?

ஒண்டியாய்ப் போகும் சமயத்தைப் பார்த்துக்கொண்
டுன்னைப் பிடிக்க வருவானேன். 3

ஆந்தை நரிநாய்கள் கள்ளர் குறத்திகள்
அர்த்த சாமத்தெங்கும் ஓடுகையில்
சாந்தையாம் பெண்ணை அச் சாம்பிணந் தின்னிப்பேய்
சார்வ தெக்காரணம் சாற்றுவையே. 4

பேய்பகற் கண்டவர் யாருமில்லை அந்தப்
பேயும் வெளிச்சத்தில் நிற்பதில்லை
தூயமனத்தவர்க் கையமில்லைச் சுடர்ச்
சோதிமுன்னே இருள் நில்லாதே. 5

அந்தியிற் கள் கஞ்சா சாராயம் கொண்
டருந்தினவர் கண்ணில் பேய்தோன்றும்
புந்தி புலன்கள் தடுமாறும் வெறும்
பொல்லா விகாரப் பேய்தோன்றிடுமே. 6

எங்கெங்கும் ஈசன் இலங்கும் இயல்பும் மற்
றெல்லாம் அவனருளால் நிகழ்வும்
துங்க ஒளியிலே காண்பவர் முன்மாயைத்
தோற்றமாம் பேயொன்றும் தோன்றாதே. 7

---

## 22-ம் அதிகாரம்—பச்சை குத்திக்கொள்ளல்

அச்சமில்லாமல் குறத்தியைக் கொண்டுதன்
அங்கத் தநேக இடங்களிலே
பச்சை குத்திக்கொள்ளும் கெட்ட வழக்கத்தைப்
பார்க்கிலும் கெட்ட வழக்குமுண்டோ? 1

தோல் வால் சுருங்கியே நோஞ்சலை மாட்டுக்குச்
சூடுகள் போடும் விதம்போல

பால்வண்ணமான நன்மேனி கறைபடப்
பச்சையைக் குத்திக் கெடுப்பானேன். 2

காளையின் மேனியில் சூலம்போற் சுட்டதில்
காயப்பட்டாறும் தழும்பினைப்போல்
தேளையும் மீனையும் நண்டையும் போலுருத்
தேகத்திற் குத்திக் கெடுப்பானேன்? 3

கொள்ளை யடித்துப் பறிப்பவரைப் பச்சை
குத்தித் தீவாந்தரம் ஏற்றுதல்போல்
பிள்ளைகள் தேகத்தில் பச்சை குத்திவிடப்
பிள்ளைகள் என்ன பிழைகள் செய்தார். 4

உள்ள சிறத்தைச் சிறப்பிக்க வேண்டி
உடல் எங்கும் மஞ்சளைப் பூசும்பெண்கள்
உள்ள அழகையும் போக்கிடும் பச்சையை
ஊசியினூற் குத்திக்கொள்ளுவதேன்? 5

---

## 23-ம் அதிகாரம்—காதுவளர்த்தல்

ஆட்டுக்குடல்போல் வடிந்திடுங் காதழ
காமென்று சொல்லி நம் தெட்சணத்தார்
மாட்டிக்கொண் டாட்டியே காட்டும்படி காதில்
மட்டுமிஞ்சி நகை போட்டுக்கொள்வார். 1

இருதோளிலும் பட்டசைகின்ற காதிலே
எற்ற நகையிட்டுப் பார்ப்பதற்கு
குறவனைக் கொண்டுதன் பெண்மகள் காதினை
குத்தி அறுத்துக் குடையச் செய்வார். 2

தக்கை யிட்டிட்டுப் பெருக்குகையில் சிறு
தங்கையின் துன்பம் பரிதாபம்

மொக்கையான குறுக்கிட்டு வளர்க்கையில்
மோசமும் காதுக்கு நேரிடுமே. 3

தொள்ளை நாரங்கிபோல் காதை வடித்துத்
தொடுத்த கனத்த பெருநகையை
கள்ளர் குறவர் படக்கென் றிழுத்துத்தம்
கைப்பற்றிக்கொள்ள இடம்பார்ப்பார். 4

ஓடும்போதும் விளையாடும்போதும் வண்டி
ஓடும்போதும் தீர்த்த மாடும்போதும்
சாடும்போதும் நகையாடும்போதிற் கையால்
தாங்காவிடி ற ஏளியாகுவளே. 5

காதெனிச் செப்தவா லஞ்சக்கொ க் கென்று
காட்டுத் தெறுங்கன் இழுக்கையிலே
காதெனக் கூவித் தமிழன் அழுங்கதை
காதுவளர்த்த கொடுமையன்றோ? 6

---

## 24-ம் அதிகாரம்—சிறுபாடுதேடல்

ஓடிஓடி உழைத்துத் தன்னமும் ஆடையும்
உற்ற நகையும் பலவிதமாய்த்
தேடி உனக்கிடச் செல்வனிருக்கச்
சிறுபாடு தேடுதல் சீரல்லவே. 1

தெரியாமல் வேறு பணஞ்சேர்க்கச் சிறு
பாடுசீ வேற தொடங்குவையேல்
அரிசிமுதலிய பண்டங்கள் பாதி
அநியாயமாக மறைந்திடுமே. 2

அப்பளம் செய்முதலானபலவும்
அரை விலைக்குப்போம் அநியாயம்!

துப்புச் சொல்லாமல் மறைப்பதற்காகத்தன்
　　தாதிக்கும் கைக்கூலி கட்டுவளே. 3

ஆயிழையாள் பணக்காரியே ஆனாலும்
　　அண்ணன் தம்பிமார் கொடுத்தாலும்
நாயகன் காணாமல் தட்டானைத்தேடி
　　நகை செய்யச்சொல்லுதல் ஆகாதே. 4

குருடி தண்ணீர்க்குப்போய் எட்டாள் வினைகெட்டும்
　　குடம் உடைந்ததென்பார் அதுபோல்
புருடன் அறியாமல் வட்டிக்குப்போட்ட
　　பொருட்சேதம் அன்றியும் பொல்லாப்பாம். 5

தங்கியர் தக்க மனிதர் என்றெண்ணித்
　　தகவலின்றிப் பொன் கொடுக்காதே
அங்கியரேனும் அடுத்தவரேனும்
　　அநியாய வட்டிகள் வாங்காதே. 6

சிறுபாட்டினால் பணம்தேடல் குற்றமன்று
　　சித்தம் உன்னுயகற் கொத்திருந்தால்
அறுபதோ ஆயிரமோ அவரால் உன்பேர்க்
　　காதரவாய்ப் பணம் போடல் நன்றே. 7

---

25-ம் அதிகாரம்—மணமகனுடன் மனம் ஒத்துவாழ்தல்

ஊழ்வலியாற் செல்வம் தேய்தல் வளர்தல்
　　உலகத்தில் என்றும் இயல்பாமே;
வாழ்விலும் தாழ்விலும் மாதவனோடு
　　மனமொத்திருத்தல் நெறியாமே. 1

பரமசிவனுடை தேகத்தில் ஓர்பாதி
பார்வதி தேவி யுருவம் என்பார்
ஒருமனத்தோருடல் உற்றவர்போல் ஆண்பெண்
ஒத்துநடக்கும் முறை குறித்தார். 2

உன்னுடை நாயகன் உன்னை மதிப்பதும்
உன்னைத் துதிப்பதும் உன்னாலே
தன்னுடை நாயகன் தாரத்தை விட்டுத்
தவறி நடப்பதும் தன்னாலே. 3

கொண்டவன் தூர்த்தன் என்றந்நியர் யாரேனும்
குற்றங்கள் உன்னிடம் சொன்னாலும்
அண்டை வீட்டிற்போய் வினாவாதே எந்த
ஆண்பிள்ளை தன்னையும் கேளாதே. 4

எத்தனை கெட்டவனாயினும் ஆண்பிள்ளை
எத்தனை தீமைகள் செய்திடினும்
உத்தமி அன்பாற் பொறுப்புடன் கண்டால்
ஒழுக்கம் திருந்தும் வகைபார்ப்பான். 5

எத்தனை நல்லவன் ஆண்பிள்ளை யானாலும்
என்ன பொறுமை யிருந்தாலும்
உத்தமி அல்லாத துர்க்குண மங்கைதன்
உள்ளத்தில் சற்றும் மதியாளே. 6

வம்பாகக் கோபத்தில் வார்த்தைகள் சொல்லியே
வைதாலும் சாந்த குணத்தாலே
அன்பான சொல்லினால் ஆண்பிள்ளை கோபத்தை
ஆற்றித்தணிப்பவள் பெண்மணியே. 7

வேர்த்துத் தவித்து விடாய்த்துக் களைப்பொடு
வீட்டுக்குவந்த புருஷன் முகம்
பார்த்து மலர்ந்த முகத்தோ டுரையாடும்
பைந்தொடியாற் களை தீர்ந்திடுமே. 8

நாட்டுப்பெண்ணே தமிழ் நாட்டுப்பெண்ணே
நடு காட்டிய நாட்டியல் கேட்டுணர்ந்தாய்
வீட்டுப்பெண்ணில் நடு வீட்டுப்பெண்ணாயினை
வேண்டுவரம் பெற்று வாழ்வாயே. 9

---

## வாழி

வாழ்க உலகெலாம் வாழ்க அரசெலாம்
வாழ்க குடிகள வளம்பொலிந்தே:
வாழ்க நாட்டுப்பெண்ணோ டொத்தவாழ் மாமியார்
வாழ்க திருவருள் வாழியவே.

---

நாட்டுப்பெண் கும்மி முற்றிற்று.

---